5th September 1958]

(ii) that dearness allowance on a par with the rates applicable to Central Government servants might be granted with effect from 1st April 1957.

The requests were examined and the Association was informed that it was not possible to comply with their request immediately.

*56. *Q*—Sri P. G. MANICKAM : கனம் நிதி அமைச்சர் அவர்கள் தயவுசெய்து பதிலளிப்பாரா—

(அ) 1957–58-ல் சென்னை அரசாங்கத்தில் வேலை செய்துவரும் கெஜெட் பதிவு இல்லாத ஊழியர்களுக்கும், கடைநிலை ஊழியர்களுக்கும் மோட்டார் வண்டிகள், மோட்டார் சைக்கிள்கள் நீங்கலாக இதர வண்டிகள் வாங்குவதற்காக, கடனுகக் கொடுக்கப்பட்டிருக்கும் தொகை எவ்வளவு (ஜில்லாவாரியாக)?

(ஆ) என்னென்ன விதமான வண்டிகள் வாங்கப்பட்டன ?

The Hon. Sri C. SUBRAMANIAM : (*a*) Total advances disbursed during 1957–58 are—

| | RS. |
|---|---|
| Chingleput district ... ... ... | 1,768 |
| North Arcot ... ... ... ... | 960 |
| Tanjore ... ... ... ... ... | 392 |
| Tiruchirappalli ... ... ... ... | 4,576 |
| Madurai ... ... ... ... ... | 1,512 |
| Ramanathapuram ... ... ... | 1,120 |
| Salem ... ... ... ... ... | 580 |
| Madras ... ... ... ... ... | 61,242 |
| Total ... | 72,150 |

(*b*) Mostly bicycles and in some cases rickshaws.

Sri N. K. PALANISAMI : இரண்டாவது பே கமிஷனுடைய சிபார்சு வெளிவருவதற்கு முன்பாக காபினெட் சப் கமிட்டியாவது போட்டு பரிசீலனை செய்து உடனடியாக ஐந்து ரூபாயாவது கொடுப்பதற்கு சர்க்கார் ஏற்பாடு செய்யுமா ?

The Hon. Sri C. SUBRAMANIAM : ஐந்து ரூபாய் கொடுப்பதற்கு காபினெண்ட் சப் கமிட்டிபோட்டு பரிசீலனை செய்யவேண்டிய அவசியம் இல்லை. அது கொடுக்க முடியுமா என்பது தான் பிரச்னை. இரண்டாவது பே கமிஷனுடைய சிபார்சும் சீக்கிரத்தில் வரும் என்று எதிர்பார்ப்பதால் அவ்வளவு அவசரமாக ஒன்றும் செய்யவேண்டிய அவசியமில்லையென்று கருதுகிறேன்.

Sri T. T. DANIEL : Sir, now that Kanyakumari district is added to Madras State, all the non-gazetted officers appointed subsequent to the date of integration are entitled to get only the Madras scales of pay. While that is so, how is it that the graduate trained teachers who are appointed after 1st November 1956 are paid the Travancore-Cochin State scale of pay which is Rs. 55 and how is it they are not getting the Madras scale of pay which is Rs. 85?

The Hon. Sri C. SUBRAMANIAM : Sir, this is a question relating to Graduate trained teachers. A separate question may be put.

[5th September 1958

**Sri P. G. MANICKAM :** கடைநிலை ஊழியர்களாக கிராமங்களில் வேலை புரிந்துவரும் வெட்டியான் போன்ற சிப்பந்திகள் கந்தாயம் வசூலிப்பதற்கு கிராமம் கிராமமாகச் செல்லவேண்டிய அவசியம் இருப்பதால் அவர்களுக்கும் சைக்கிள் வாங்கிக்கொள்வதற்கு கடனாகத் தொகை கொடுக்கப்படுகிறதா ? அப்படி இல்லையென்றால் இனிமேலாவது கடனாகக் கொடுத்து உதவ சர்க்கார் ஏற்பாடு செய்யுமா ?

**The Hon. Sri C. SUBRAMANIAM :** ஒவ்வொரு கிராமத்திற்கும் தனித் தனியாக தலையாரி போன்றவர்கள் நியமிக்கப்பட்டிருக்கிறார்கள். ஆகவே அவர்கள் ஒரு கிராமத்திலிருந்து இன்னொரு கிராமத்திற்குப் போக வேண்டிய அவசியம் இல்லை.

**Sri M. KALYANASUNDARAM :** மத்திய சர்க்கார் சிப்பந்திகளுக்குக் கொடுப்பதுபோல உடனடியாகப் பஞ்சப்படி இங்கும் வழங்குவது சாத்தியம் இல்லையென்று சொன்னார்கள். எப்பொழுது சாத்தியமாகும் ? அதற்காக எவ்வளவு தொகை செலவாகும் என்று கணக்கிடப்பட்டிருக்கிறதா ?

**The Hon. Sri C. SUBRAMANIAM :** கணக்கு பார்த்தால், இப்போது 12 ரூபாய் கொடுத்தோம். அதன் காரணமாக $4\frac{3}{4}$ கோடி செலவாகிறது. அதிலிருந்து கணக்குப் போட்டுக்கொள்ளலாம். இப்போது இருக்கிற அளவை உயர்த்தி மத்திய சர்க்கார் சிப்பந்திகளுக்குக் கொடுப்பது போல கொடுக்கவேண்டுமென்றால் இன்னும் $5\frac{1}{2}$ கோடிக்கு மேல் செலவாகும்.

**Sri K. ANBAZHAGAN :** கெஜெட் பதிவு இல்லாத கடைநிலைப் பட்ட சிப்பந்திகள் இன்னும் வேலை உறுதி செய்யப்படாமல், காயம் செய்யப்படாமல் இருக்கிறார்கள். பலமுறை அரசாங்கத்தாரிற்கு விண்ணப்பித்துக்கொண்டும் இருக்கிறார்கள். அவர்கள் குறை கவனிக்கப்பட்டதா ?

**The Hon. Sri C. SUBRAMANIAM : A separate question may be put.**

**Sri M. R. KANDASWAMI MUDALIYAR :** கனம் தலைவர் அவர்களே, இப்போது சம்பள உயர்வு கொடுக்கப்பட்டிருக்கிற பட்டியலில் கிராம அதிகாரிகள்—கர்ணம், தலையாரி, தோட்டிகள்—முதற்கொண்டு சேர்க்கப்பட்டிருக்கிறார்களா ? அவர்களுடைய பிரச்னையும் பரிசீலிக்கப்படுமா ?

**The Hon. Sri C. SUBRAMANIAM :** அவர்களுக்குத் தனியாகச் சம்பள உயர்வு கொடுக்கப்பட்டிருக்கிறது. இந்த 12 ரூபாய் கொடுக்கவில்லை. கர்ணத்திற்கு 7 ரூபாயும், இதர வில்லெஜ் ஆபீசர்களுக்கு 5 ரூபாய் உயர்வு கொடுக்கப்பட்டிருப்பதாக நான் நினைக்கிறேன்.

**Sri A. GOVINDASAMI :** இரண்டாவது பே கமிஷனுடைய அறிக்கையை எதிர்பார்ப்பதாக அமைச்சர் அவர்கள் சொன்னார்கள். அந்த அறிக்கை வெளிவந்தவுடனே உடனடியாக அது அமுலாக்கப்படுமா ? அல்லது மீண்டும் அது பரிசீலனை செய்யப்பட்ட பிறகு தான் அமுலாக்கப்படுமா ?

**The Hon. Sri C. SUBRAMANIAM :** இதில் என்ன சொல்லப் போகிறார்கள் என்பது தெரியாமல் அப்படியே அமுல் செய்யப்படும் என்று எவ்வாறு சொல்லமுடியும் ? அந்த அறிக்கையைப் பரிசீலனை செய்த பிறகு தான் முடிவு எடுக்கப்படும்.

### *Drinking water*

* 57· ***Q*—Sri M. C. MUTHUKUMARASWAMY :** கனம் ரெவினியு அமைச்சர் அவர்கள் தயதுசெய்து பதிலளிப்பாரா—

(அ) தஞ்சை ஜில்லாவிலுள்ள தானாக இயங்கும் **(automatic)** குடி தண்ணீர் பம்பு செட்டுகள் எத்தனை ?

(ஆ) அவைகளுக்காகச் செலவிட்ட தொகை எவ்வளவு ?